


முகமூடி வீரர் மாயாவி தோன்றும்

# அபாய நகரம்

ரூ. 3

# போற்றுவோம்!



பெருந் தலைவர் என்றுமோர்
பேரில் விளங்கிய காமராஜ்
சிறந்த முதல்வர் ஆயினார்
செயலில் சிறந்து விளங்கினார்!

அறிஞர் என்னும் பெயரிலே
அன்புத் தமிழர் அழைத்திட்டார்
அறிஞர் அண்ணாத் துரையவர்
ஆட்சித் தலைமையும் பெற்றவர்!

தமிழர் தந்தை ஆயினார்
தந்தை சி.பா. ஆதித்தர்
தமிழின் அமைச்ச ராகவே
தமது பெயரை நிறுவினார்!

ஏடு போற்றும் இவரெல்லாம்
இனிய தமிழர் தலைவர்கள்
நாடு போற்றும் நல்லவர்
நாமும் இவரைப் போற்றுவோம்!

—நல்லைக்கவி அ. இளங்கோவன்

# மாணவர்களுக்கு
# ரூ. 10 ஆயிரம் பரிசு!

*மாணவ — மாணவிகளே!*

*புதிய வகுப்புக்குப் போகப் போகிறீர்கள்! வாழ்த்துக்கள்!*

*புதிதாகப் புத்தகம் — நோட்டுகள் வாங்க வேண்டுமே? அதற்கு உங்களுக்கு உதவி செய்ய "ராணி காமிக்ஸ்" முன்வந்திருக்கிறது!*

*புத்தகங்கள் வாங்க 100 மாணவர்களுக்கு தலா ரூ. 100 வீதம் மொத்தம் ரூ. 10 ஆயிரம் கொடுக்கப்படும்.*

*உங்களுக்கு வேண்டுமா? "வேண்டும்" என்றால், கீழே இருக்கும் கூப்பனை நிரப்பி ஒரு ரூபாய் அஞ்சல் உறைக்குள் வைத்து எங்களுக்கு அனுப்பி வையுங்கள். ஒருவர் எத்தனை கூப்பன் வேண்டுமானாலும் அனுப்பலாம். பரிசுக்கு உரியவர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்து எடுக்கப்படுவார்கள்.*

*முதலில் மே 30—க்குள் எங்களுக்கு வரும் கடிதங்களைக் குலுக்கி எடுத்து, 25 மாணவ — மாணவிகளுக்குத் தலா ரூ. 100 அனுப்பி வைக்கப்படும்.*

*அனுப்பவேண்டிய முகவரி:*

*ஆசிரியர், "ராணி காமிக்ஸ்", சென்னை — 600 007.*

**2**

பெயர்:........................................................................

வகுப்பு:........................................................................

பள்ளி முகவரி:........................................................................

........................................................................

அஞ்சலக எண்: | | | | | |

# கோடை விடுமுறையை கழிப்பது எப்படி?

மாணவ – மாணவிகள் கோடை விடுமுறையில் வீட்டில் இருப்பார்கள். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் விடுமுறையை பயனுள்ளதாக கழிக்க முயலவேண்டும்.

குழந்தைகளை பயனுள்ள பல சுற்றுலாத் தளங்களுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். போன இடத்தில் பார்க்கும் பொருளைப்பற்றி குழந்தைகளுக்கு பல கேள்விகள் எழும். அவர்களின் கேள்விகளுக்கு அவர்களுக்குப் புரியும்படியான பதிலைச் சொல்லுங்கள். அது அவர் களின் மனதில் “பசுமரத்து ஆணி” போல பதியும். எனவே குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்கு தடைபோடாதீர்கள்.

குழந்தைகளுக்கு நிறைய கதைகள் சொல்லலாம். அதுவும் பாட்டிக் கதைகள் என்றால் குழந்தைகளுக்கு கொள்ளைப் பிரியம். ராஜா ராணிக் கதைகள் என்றால் ஆவலுடன் ரசித்துக் கேட்பார்கள். குழந்தை களுக்கு கதை சொல்லும்போது அவர்களின் ரசனையை அறிந்து சுவைபடச் சொல்ல வேண்டும். நீதியையும், கல்வியையும், வீரத்தையும், பிறருக்கு உதவி செய்வதையும், பெரியவர்களுக்கு கீழ்படிதல் போன்ற நல்ல குணங்கள் மேலோங்கி இருக்கும்படியான கதைகளைச் சொல் வது நல்லது.

குழந்தைகளின் பிஞ்சு மனங்களில் பதியக்கூடியக் கதைகள்தான் பிற்காலத்தில் வாழ்க்கையை சீர்படுத்த உதவியாகவும், உதாரணமாக வும் இருக்கும். தாய் சொன்ன கதையால்தான் நாட்டை ஆளும் திறமையையும், வீரத்தையும் மாவீரன் சிவாஜி பெற்றான்.

குழந்தைகளிடத்தில் விடுகதைகளைக் கூறி அதற்கான விடை கேட்டு குழந்தைகளின் சிந்திக்கும் ஆற்றலை வளர்க்க வேண்டும். குழந்தை களுக்கு தினமும் ஒரு கதையாவது சொல்ல வேண்டும்.

வரலாற்றுக் கதைகள், நவீனக் கதைகள், உலக அதிசயக் கதைகள், வீரக்கதைகள், உயர்ந்த பண்புடையக் கதைகளைக் கூறுவதால் குழந்தை களும் உயர்ந்தவர்களாக ஆவார்கள். குழந்தைகள் ஒவ்வொன்றும் இந்நாட்டின் கண்மணிகள். அதை மறந்துவிடக்கூடாது.

ராணி காமிக்ஸ் – 310 மே 16 – 31
(மாதம் இருமுறை இதழ்) 1997



முகமூடிவீரர்

# மாயாவி

தோன்றும்

# அபாய நகரம்


மாயாவி தனது வெள்ளைக் குதிரையில் விரைந்து போய்க் கொண்டிருந்தார்.
எனக்குக் கிடைத்த தகவல்கள் உறுதியாக இருந்தால்...


ரெக்ஸ் பற்றி சில தகவல்கள் கிடைத்துள்ளன... அதை உறுதிப்படுத்திக்கொள்ள பரோன்கான் நகரத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறேன்!
அது ஆபத்தான நகரம் ஆயிற்றே!


இதுதான் அரேபியாவில் உள்ள பரோன்கான் நகரம். பல மர்மங்களைக் கொண்டது! யாரும் நகருக்குள் எளிதில் நுழைந்துவிட முடியாது.

வழியில் சிலரை முகமூடி சந்தித்தார்.

யார் இவர்கள்? ஏங்கே கொண்டு போகிறார்கள்?

பரோன்கான் போகும் வழி அல்லவா இது?

இங்கே இருந்து பார்ப்போம்.

ஏன் நிற்கிறாய்? நட!

பசிக்கிறது. சாப்பாடு வேண்டும்!

சாப்பாடா வேண்டும்... இந்தா...

!

என்ன கொடுமை இது!




காவலாளி அலியை கழுத்தைப் பிடித்து முகமூடி மேலே தூக்கினார்.






அடிமை வியாபாரம் செய்கிறாயா...


உன்னைக் காணோம் என்று மற்றவர்கள் தேடி வரக்கூடாதே...


உன் உடையை நான் அணிந்துகொண்டு...


கூட்டத்துடன் போய்ச் சேர்ந்து கொள்ளுகிறேன்


அலியை எங்கே?
அதோ வருகிறார்.


அழகான வெள்ளைக்குதிரை! ஏது அலி?
வழியில் ஒரு வியாபாரியிடம் வாங்கிக் கொண்டு வருகிறேன்.


தொடர்ந்து நடந்தார்கள்.
குடிக்கத் தண்ணீராவது கொடுங்கள்
எதுவும் கிடையாது நட


ரெக்ஸ் மர்மத்தை விடுவிக்கத்தான் நான் புறப்பட்டேன்


ஆனால் இந்த அடிமைகளை இப்படியேவிட்டுவிட முடியாது


பசி... கண்ணை இருட்டுது... இதுக்குமேல் நடக்க முடியாது.


அடிவேண்டுமா? ஒழுங்கா நடங்கள்!


முகமூடி கத்தினார்
சாப்பாடு கொடுங்கள்!


அலி குரல் மாதிரி இல்லையே!
அலி அடிக்கத் தான் சொல்லுவார்! குடிக்கத் தண்ணீர்கூடக் கொடுக்கமாட்டார்!


குரலும் வேறு...
குதிரையும் வேறு


அவர்களுக்கு சாப்பாடு கொடுக்காமல் அங்கே என்ன பேச்சு?
நீ எங்கள் அலி அல்ல!
நீ யார்?


நான் யாரா... பார்த்துக் கொள்ளுங்கள்!


யாரோ கொள்ளைக்காரன்...
பிடி... அடி...


முகமூடி அவர்களை கடுமையாகத் தாக்கினார்.
கும்!


நண்பர்களே! இந்த அடிமை வியாபாரிகளைக் கட்டிப்போடுங்கள்!


உங்களுக்கு விடுதலை....
உங்கள் ஊருக்குச்
செல்லுங்கள்!


முகமூடி மீண்டும் அலியின் உடையை அணிந்துகொண்டு, பரோன்கான் நகரை அடைந்தார்.


வியாபாரம் மிகுந்த நகரம்
போலிருக்கிறது!
வியாபாரிகளுடன் சேர்ந்து முகமூடியும் கோட்டைக்குள் புகுந்தார்.


வேகமா போ.
உன்னிடம் பாஸ் இருக்கிறதா?


அலியா... நீ போகலாம்!
நில், அலி.


அலி! போனதடவை வந்தபோது எனக்கு பத்து பொற்காசு கடன் சொன்னாயே, கொடு!
அடுத்த தடவை தருகிறேன்.


அதெல்லாம் முடியாது இப்போதே கொடு!!
!


இந்தா வாங்கிக்கொள்!
ஆ!


என்னையா அடிச்ச... உன்னை சுட்டுக்கொல்லுகிறேன்...


அவனை கொல்லாமல் விடமாட்டேன்.
ஏய்... பொறு... பொறு...







அதேநேரம்— முகமூடி அடித்துப் போட்டுவிட்டு வந்த அலி எழுந்தான்...




முகமூடி கோட்டைக்குள் நுழைந்தார்.










பகதூர் எங்கே இருக்கிறார்?
பகதூரைப் பற்றிக் கேட்க யார் நீ?
ஆ... அவர் அலி! பகதூருக்கு அடிமைகளைக் கொண்டு வருகிறவர்.


இவர்தான் பகதூர். பரோன்கான் நகர ஆட்சியாளர்.
அலி உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்.


அலி... உடனே வரச்சொல்...
நான் அலியுடன் பேசவேண்டும். உன் ஆட்டத்தைப் பிறகு வைத்துக்கொள்ளுவோம்.


அலியை அழைத்துப் போனார்கள்.
அடிமைகள் எங்கே?
பின்னே வருகிறார்கள்.

அதே நேரம் அலி கோட்டைக்கு வந்து சேர்ந்தான்!
என்னைத் தெரியவில்லை? நான்தான் அலி! உனக்குக் கூடப் பத்துப் பொற்காசு கடன் தரவேண்டும்...
நீ... நீ... அலியா... அப்படியானால், ஏற்கனவே வந்தது யார்?


பகதூரைப் பிறகு பார்க்கலாமே!
என்ன சொல்லுகிறாய். அலி?


ஆ...
கும்...


சந்திக்க வேண்டிய நேரத்தில் பகதூரை சந்திக்கவேண்டும்

நீ இங்கே இரு. நான் வருகிறேன்!

முகமூடி வெளிச்சுவரில் ஏறினார்!

முதலில் உள் இரகசியங்களை அறிய வேண்டும்!

அடிமைகள் எங்கே, அலி?

அந்த அநியாயத்தை எப்படிச் சொல்லுவேன்? முதலில் பகதூரைப் பார்க்கவேண்டும்!

இந்த உடையை அணிந்துகொள்.

அரண்மனையில்

தங்கச்சுரங்கத்தில் உற்பத்தி இவ்வளவு குறைவாக இருக்கிறதே?

அடிமைகள் களைத்துவிட்டார்கள்! புது அடிமைகள் வேண்டும்.

அந்நேரம் அலி உள்ளே வந்தான்.

என்ன... அடிமை களைக் கொண்டு வரவில்லையா...

ஆமா பகதூர்... எவனோ ஒருவன் என்னை அடித்துப் போட்டுவிட்டு, அடிமைகளை ஓட்டிப் போய் விட்டான்

பொய் சொல்லாதே! நீ அப்போதே வந்து விட்டாய் என்று எனக்கு ஏற்கனவே தகவல் வந்து விட்டது!

ஓ... இவன்தான் பகதூர்ரா...

என்னை அடித்தவன்தான் வந்திருக்கவேண்டும், பகதூர்!

உன்னையும் அடிக்க ஒருவனால் முடியுமா?


இதோ
பாருங்கள்.
இது என்ன
முத்திரை?


இதுதான் மாயாவியின் முத்திரை. மாயாவியிடம் அடிபட்ட எல்லாருக்கும் இந்த முத்திரை இருக்கும்!


சிறுபையனாக இருந்தபோது ஒரே முறை மாயவியை நான் பார்த்திருக்கிறேன்.


அவன் ஒரு காட்டுமிராண்டி! அவனைப் பற்றி இப்படிக் கதை அளக்கிறீர்களே!


அவன் ஒரே ஆள்
அடிமைகளை எல்லாம்
விடுவித்துவிட்டான்!


அவன் இப்போது
எங்கே இருக்கிறான்?


தெரியவில்லை,
பகதூர்.


நகர் முழுவதும்...
மூலை முடுக்கெல்லாம்
அவனைத்தேடுங்கள்!
எப்படியும் பிடித்து இழுத்து
வாருங்கள்!!


அவனுக்கு மரணம் இல்லையாம்... அதையும் பார்த்துவிடுவோம்...


ஆ...
??


அதே அடையாளம்... எப்படி வந்தது


அவன் இங்கே வரவில்லையே! முத்திரைமட்டும் எப்படி வந்தது...


மாயாவி ஆயிற்றே... நம் கண்ணுக்கு தெரியாமலே நடமாடுவாராம்... காற்றுபோல.
!!


அவனை விடக்கூடாது! உடனே பிடித்து வாருங்கள்!!


யாரைத் தேடுகிறீர்கள்?
ஒரு முகமூடி அணிந்த ஆளை!
அவனைப் பிடிக்கமுடியுமா என்ன?


அவனை கோட்டைக்குள் விட்டது யார்? அந்தக் காவலாளியை முதலில் பிடித்து வாருங்கள்!
என்னைத்தான் தேடுகிறார்கள் போலிருக்கிறது!


பகதூர் உன்னை அழைத்துவரச் சொன்னார்?
எதுக்கு... பகதூர் ஏன் என்னைக் கூப்பிடுகிறார்?
முகமூடியை கோட்டைக்குள் விட்டது நீதானா?
அவன் முகமூடின்னு தெரியாது, பிரபு!


அவன் கால், கைகளை சக்கரத்தில் கட்டுங்கள்!
!


அவன் அலின்னு சொன்னான். அதுதான் கோட்டைக்குள் விட்டேன்.
சக்கரம் சுழலட்டும்... அவன் கால் கைகள் தனித்தனியே பிய்ந்துதொங்கட்டும்...


அந்நேரம் முகமூடி அங்கே வந்தார்.


ஆ... பேய்..
பேய்...


காவலாளிகள் ஓடிவந்தார்கள்.
கண்ணாடி சன்னல் உடைந்திருக்கிறது...


இரும்புச் சங்கிலி அறுந்துவிட்டது...
இரும்புச் சங்கிலியை அறுக்கும் அளவு அவன் பலவானா?


ஆ.... அதே முத்திரை.
!


ஒரு பேப்பரை கிழிப்பது போல இரும்பு சன்னலை உடைத்திருக்கிறானே.... ஆபத்தான ஆள்தான்!


மாயாவி காவலாளியைக் காப்பாற்றி அழைத்துப் போனார்.
அவர்கள் பார்த்தால் உன்னையும் கொன்று விடுவார்கள்!
முதலில் நீ பிழைக்கும் வழியைப் பார்!


இனி... இந்த ஊரிலேயே இருக்காதே... எங்காவது ஓடிவிடு.
நீ.... நீ.... நீதான் மாயாவியா?
காவலாளியை கோட்டை சுவரில் ஏற்றிவிட்டார்.
உனக்கு நண்பன்... உனக்கு என்ன ஆபத்து ஏற்பட்டாலும் என்னைக் கூப்பிடு!


தும்மா, உனக்குத்தான் அந்த மாயாவியைத் தெரியும். இந்தா துப்பாக்கி! அவனைப் பார்த்தால் உடனே சுட்டுக்கொன்று விடு!
துப்பாக்கியால் சுட்டாலும் அவன் சாகமாட்டான் என்று சொன்னேனே...
World rights reserved.


போடா வெளியே... அடிமை நாயே... சாகாத மனிதனும் உண்டோ... நீ ஒரு கோழை...
இந்த பகதூர் என்னை அடிக்கடி அடித்து உதைக்கிறான்... எனக்கு எப்போது விடுதலை கிடைக்கும்...


மாயாவி திடீர் என்று பாய்ந்து அவனைப் பிடித்தார்.
ஆ... மாயாவி...


உனக்கு நான் விடுதலை பெற்றுத் தருகிறேன்.
நீ எவ்வளவு நாளாக இங்கே-இருக்கிறாய்?
எட்டு ஆண்டாக


முதலில் தங்கச்சுரங்கத்தில் வேலை செய்தேன்.


நிற்காதே... வேலையைப், பார்.


சுரங்கத்துக்குள் வேலை செய்ய முடியாது— அவ்வளவு ஆழம்— காற்று கிடையாது... அனல்தகிக்கும்.


வேலை செய்யா விட்டால் அடித்தே கொன்றுவிடுவார்கள்...


ஒருநாள் சுரங்கத்துக்கு அரசர் வந்தார். அடிபட்டு அழுதுகொண்டிருந்த என்னைப் பார்த்தார்.
இவனை அரண்மனை வேலைக்கு அனுப்புங்கள்!


இப்போது இளவரசர் எங்கே இருக்கிறார்?
அரண்மனையில் படுத்த படுக்கையாக இருக்கிறார். யாரும் அவரைப் பார்க்க முடியாது.
அரசர் இறந்து போனால், அடுத்து பகதூர் அரசன் ஆகிவிடுவான்...


அரசருக்கு வாரிசு இல்லை
இருக்கிறான்! அதை உறுதி செய்துகொள்ளவே நான் இங்கே வந்திருக்கிறேன்!


எங்கே... எங்கே இருக்கிறான்?
தம்மா எனக்கு நீ உதவி செய் வாயா?
உங்களுக்காக என்ன வேண்டுமானாலும் செய்வேன்
உனக்கும் விடுதலை கிடைக்கும்!


எல்லா அடிமைகளையும் விடுதலை செய்யுங்கள்!
அரசருக்கு ஒரு மகள் இருந்தாளாமே, உண்மையா?


எனக்குத் தெரிய வில்லையே...


யாரிடம் கேட்டால் தெரியும்?


அரசருக்கு உதவியா ஒரு கிழவி இருக்கிறாள்.


அரசே... குப்... குடியுங்கள்!
எதாக இருந்தாலும் அவள் முதலில் சாப்பிட்டுப் பார்த்துவிட்டுத்தான் அரசருக்குக் கொடுப்பாள்


ஏன்? அரசருக்கு யாரும் நஞ்சு வைத்து விடுவார்கள் என்றா?
பகதூரே நஞ்சு வைத்து அரசரைக் கொன்று விடுவான்!


அரசர் குழந்தையாக இருந்தபோது அவருக்கு ஆயாவா இருந்தவள், இந்தக் கிழவி. எனவே, அரசர் மீது அளவுகடந்த அன்பு கொண்டவள்.







பகதூரும், அரண்மனை வைத்தியரும் தனியே பேசிக்கொண்டார்கள்.




ஆ... கொள்ளைக் காரன்...
இல்லை... அரசரைக் காப்பற்ற வந்திருப்பவன்!
டமால்


அரசருக்கு மருந்து என்று நஞ்சு கொடுக்கிறார்கள்
எனக்குத் தெரியும். ஆனால், என்னால் அதைத் தடுக்க முடியவில்லை.


இருவரும் அமர்ந்து பேசினார்கள்.
பகதூர் மிகக்கொடியவன். நீ எப்படி அரசரைக் காப்பாற்றுவாய்?
என்னால் முடியும். அதுக்கு முன் எனக்கு ஒரு உண்மை தெரிய வேண்டும்.
அரசரின் மகளைப் பற்றிய விவரம் எனக்கு வேண்டும்.
ஓ... இளவரசி லிசண்டா... எவ்வளவு இனிய பெண்

முதலில் தேநீர் குடி. எல்லாம் சொல்லுகிறேன்.

இல்லை... முதலில் இளவரசி லிசண்டா பற்றிச் சொல்லுங் கள்.

ஓ... லிசண்டா... என் மகள்போல... எவ்வளவு அன்பு... எவ்வளவு அழகு.. இப்போது நினைத்தாலும் கண்ணீர் வருகிறது.

லிசண்டா... அரசரின் ஒரே மகள்... அவள் மீது அரசருக்கு உயிர்


அவள் லண்டனில் படித்தாள். இரு காவலாளிகள் எப்போதும் அவளுடன் இருப்பார்கள்.


தன்னுடன் படித்த ஒரு மாணவனை இளவரசி . காதலித்தாள்.
நான் வருவேன். நீங்கள் போங்கள்.


மகள் காதலிப்பது அரசருக்குத் தெரியுமா?
தெரியாது. காவலாளிகள்கூடச் சொல்லவில்லை.


ஒரு நாள் இரவு... காவலாளிகள் தூங்கிக்கொண்டிருந்தபோது...


காதலனுடன் இளவரசி ஓடிப்போய் விட்டாள்!


ஓடிப்போய் இருவரும் திருமணம் செய்து கொண்டார்களா?
ஆமாம். ஆனால், அந்தத் திருமணத்தை அரசர் ஏற்றுக்கொள்ளவில்லை. இளவரசியை மட்டும் திரும்பிவரும்படி அழைத்தார்.


ஆயா... நான் இப்போது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறேன், தெரியுமா?
குழந்தை உண்டாகியிருக்கிறேன்!
மிக்க மகிழ்ச்சி இளவரசி... ஆண் குழந்தை பிறக்கவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.


குழந்தையும் பிறந்தது. ஆனால், இளவரசி இறந்து போனாள்.
குழந்தையை மட்டுமே காப்பாற்ற முடிந்தது!
ஆண் குழந்தை... அரசரிடம் கொண்டு போய்க் காட்டுவோம்!


என் மகளின் உயிரைக் குடித்த குழந்தை.. அதன் முகத்தைப் பார்க்கவே நான் விரும்பவில்லை... கொண்டுபோய் விடுங்கள்.


அரசே... இவன் உங்கள் பேரன்.
அரசரை தொல்லைப் படுத்த வேண்டாம், டாக்டர். வாருங்கள்!


அதுக்குப் பிறகு குழந்தையும் செத்துப் போய்விட்டது.


இல்லை... குழந்தை உயிருடன் இருக்கிறது.
இருக்க முடியாது!


குழந்தை உயிருடன் இருக்கிறது. அதன் பின்னணியில் இருக்கும் இரகசியத்தை அறிந்துகொள்ளவே நான் இங்கே வந்தேன்.


மணி கிணு கிணுத்தது!
ஓ... இளவரசருக்கு சாப்பாடு கொடுக்க வேண்டும்.


பேச்சுக்குரல் கேட்டுக் காவலாளிகள் வந்தார்கள்.
அந்த முகமூடிக் கொள்ளைக்காரன் உள்ளேதான் இருக்கிறான்.


விட்டுவிடக்கூடாது! கவனம்!! ஆள் பெரிய ஆள்... நழுவிவிடுவான்


இளவரசியின் கணவர் என்ன ஆனார்?
இளவரசி இறந்த சில நாளில் ஒரு மலை அடிவாரத்தில் அவன் பிணம் கிடந்தது.


கொலையோ, தற்கொலையோ தெரியவில்லை.
கதவு பூட்டப் பட்டிருக்கிறது, பகதூர்.
உடையுங்கள்!


கதவை உடைத்துக்கொண்டு காவலாளிகள் உள்ளே நுழைந்தார்கள்.
எங்கே அவன்?
ஓடிவிட்டான்.
அதோ... ஆசரின் அறைக்குள் போகிறான்.


அரசர்... அரண்மனையிலேயே... கைதிபோல வைக்கப்பட்டு இருக்கிறார்.


மாயாவி காவலாளிகளை அடித்து நொறுக்கினார்!
!


தொல்லை கொடுத்ததற்கு மன்னிக்க வேண்டும், அரசே!


யார் நீ... முகமூடி கொள்ளைக்காரனா?
இல்லை, அரசே. ஒரு முக்கிய விசயமாக உங்களுடன் பேச வந்திருக்கிறேன்.


காவலாளிகள் வந்தார்கள்.
அசையாதே... சுட்டு விடுவோம்!


பகதூர், யார் இவன்?
பார்த்தால் தெரியவில்லை. முகமூடி கொள்ளைக்காரன்!










மாயாவியின் துப்பாக்கி விளையாடியது!


காவலாளிகளும் சுட்டார்கள்
டமீல்....


உங்கள் துப்பாக்கிக் குண்டுகள் என்னை ஒன்றும் செய்யாது... துப்பாக்கிகளைக் கீழே போடுங்கள்!


உங்கள் பேரனை ஏன் கொலை செய்யக் கட்டளையிட்டீர்கள்? அதைத் தெரிந்து போகத்தான் நான் வந்தேன்.
!


என் பேரன் உயிருடன் இருக்கிறான் என்று சொன்னாயே...
சொல்லுகிறேன். ஏன் பேரனைக் கொல்லச் சொன்னீர்கள்? அதை முதலில் சொல்லுங்கள்!


இல்லை... நான் கொல்லச் சொல்ல வில்லை.


என் அன்பு மகள் இறந்தாள். அந்தத் துயரத்தில் குழந்தையைப் பார்க்க நான் விரும்பவில்லை.


அப்படியானால், பகதூரே குழந்தையையும் கொல்ல ஏற்பாடு செய்தானா? உங்களுக்கு வாரிசு இல்லை என்றால் அவன் அரசன் ஆகிவிடலாம் அல்லவா?


எல்லாம் கட்டுக்கதை!


எதுடா கட்டுக்கதை.
கும்!


அரண்மனை வைத்தியரிடம் சொல்லி இளவரசியைக் கொன்றதும் நீதான்! இளவரசியின் கணவனை மலையிலிருந்து உருட்டி விட்டுக் கொன்றதும் நீதான்!
இளவரசியின் குழந்தையை மலையிலிருந்து உருட்டி விட்டதும் நீதான்!


அரண்மனை வைத்தியருக்கு எல்லாம் தெரியும். அவரை வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள்!
!
!
என்னைக் கொன்றுவிடாதே! எல்லாம் உண்மைதான்!


இப்போது உங்களைக் கொல்லக்கூட மருந்துகளில் நஞ்சு கலந்து கொடுத்துக்கொண்டிருக்கிறார்!


இதுதான் உங்கள் பேரன் படம். இப்போது 12 வயது.
ஆ! அப்படியே அம்மாவைப் போலவே இருக்கிறான்!


மலையிலிருந்து உருட்டிவிடப்பட்ட குழந்தை சாகவில்லை. அழுது கொண்டிருந்த குழந்தையைக் காட்டுவாசிகள் எடுத்து வந்து என்னிடம் கொடுத்தார்கள். நான் ரெக்ஸ் என்று பெயர் வைத்து வளர்த்து வருகிறேன். சமீபத்தில் பரோன்கான் நகரிலிருந்து வந்த சில வியாபாரிகள் சொன்ன செய்தியிலிருந்து நான் சந்தேகப்பட்டு இங்கே கிளம்பி வந்தேன.
என் பேரன் இப்போது எங்கே? நான் பார்க்க வேண்டும்! உடனே அழைத்து வாருங்கள்!


அதற்கு முன்... அரசர் ஒரு சிறு உதவி செய்யவேண்டும்.
என்ன வேண்டும்? கேள்!


இங்கேயுள்ள எல்லா அடிமைகளையும் விடுவிக்க வேண்டும். அடிமை வியா பாரத்தை நிறுத்தவேண்டும்
அப்படியே ஆணையிடு கிறேன்! என் பேரனை காட்டு!


மேடம் டயானவா... உங்களுக்கு மாயாவியிடமிருந்து ஒரு செய்தி வந்திருக்கிறது.


நல்ல சேதிதானே?
ஆமாம். ரெக்சை அழைத்துப் போக விமானம் வருகிறதாம். தயாராக இருக்கவேண்டுமாம்!
ரெக்சிடம் டயானா செய்தி.
பரோன்கான் நகருக்கா... எதுக்கு அம்மா?
உன் தாய் தந்தையைக் கண்டுபிடிக்க முகமூடி பரோன்கான் போயிருக்கிறார். கண்டுபிடித்து விட்டார் போலிருக் கிறது.


என் அம்மா– அப்பா நீங்கள் இருவருந்தானே?
நாங்களும் இருப்போம். கவலைப்படாதே!


இவர்தான் ரெக்சின் தாத்தா. மற்றதெல்லாம் பிறகு சொல்லுகிறேன்!


என் அன்புப் பேரனே! உன் பெயர் என்ன?
ரெக்ஸ்.


அழகான பெயர்தான். ஆனால், இனி வெறும் ரெக்ஸ் அல்ல... இளவரசன் ரெக்ஸ்.
உங்கள் பெயர் என்ன தாத்தா?


அரசர்களுக்கு எத்தனையோ பெயர்கள் இருக்கும். எனக்கே மறந்துவிட்டது.


நீ என்னை தாத்தா என்று அழை... அதுவே எனக்கு மகிழ்ச்சி... இன்பம்.
தாத்தா.


அரசே! இவர் டாக்டர் ராபர்ட். சிறந்த மருத்துவர்.
இப்போது நான் வாழ ஆசைப் படுகிறேன்... என் பேரனை வளர்க்கவாவது நான் வாழவேண்டும்.


மருத்துவர் அரசரை சோதித்தார்.
மூச்சை நல்லா இழுத்துவிடுங்கள்...
சரியான நேரத்தில் வந்து அரசரையும் காப்பாற்றி யிருக்கிறீர்கள்.


அரசே... எங்கே புறப்பட்டுவிட்டீர்கள்? படுக்கையைவிட்டு நீங்கள் எழக் கூடாது!
நான் புத்துயிர் பெற்றுவிட்டேன்... உடனே செய்யவேண்டிய ஒரு வேலை இருக்கிறது...
உடனே அரசவை கூடட்டும்!


இளவரசருக்கு அழகிய உடைகள் அணிவித்து, அவைக்கு அழைத்து வாருங்கள்!


ரெக்சுக்கு இளவரசு உடை அணிவிக்கப்பட்டது
ஆ... இளவரசன் போலவே இருக்கிறான்!
போலவே என்ன! ரெக்ஸ் இளவரசனே தான்!!


நீயும் அவைக்கு வா.
மிகவும் நன்றி அரசே!


அரசவைக்கு அரசர் வந்தார்.
என்ன அறிவிக்கப் போகிறார்?


சபையோர்களே! ஒரு முக்கிய ஆணையை இப்போது அறிவிக்கப் போகிறேன்!
? ?


காணாமல் போன என் பேரன் ரெக்ஸ் மீண்டும் வந்திருக்கிறான்...
?!


ரெக்சுக்கு இளவரசு
பட்டம் சூடி, என் வாரிசாக
நியமிக்கிறேன்!


இந்த இனிய நாளில் அடிமைகள்
அனைவருக்கும் விடுதலை
அளிக்கிறேன்.


அடிமைகள் எல்லோரும்
விடுதலை செய்யப்பட்டார்கள்!


அடிமை வியாபாரத்தையும்
தடை செய்கிறேன்.
கொண்டாட்டம்...
ஆ... விடுதலை...


பகதூர் சிறையில் அடைக்கப்பட்டான்!


அடையாளம் தெரிகிறதா? நீ மலையிலிருந்து உருட்டிவிட்ட குழந்தை இதுதான்!
என்னை சிறையில் அடைக்கவே பிழைத்திருக்கிறான்!


மாயாவியும், டயானாவும் காட்டுக்குத் திரும்பினார்கள்.
ரெக்சைப் பிரிந்துபோவது மிகவும் வருத்தமாக இருக்கிறது!
வருத்தப்படாதே. எப்போது வேண்டுமானாலும் அவனைப் பார்க்க வரலாம் அவனும் நம்மைப் பார்க்க வருவான்.
(முடிந்தது)




முன்கதை சுருக்கம்:-

*மாணிக்கபுரியை பூபதி என்ற மன்னன் ஆண்டுவந்தான். அவனுக்கு மூன்று மகன்கள். திடீரென்று ஒரு நாள் மாயமிருகம் நாட்டுக்குள் புகுந்து பயிரை அழித்து வந்தது. மாயமிருகத்தை தேடி முத்தழகன் புறப்பட்டான்.*

"சரி, உன் விருப்பப்படியே ஆகட்டும். ஆனால், ஒரு நிபந்தனை" என்று அவன் கூறினான்.

"என்ன?" என்று குதிரை கேட்டது.

"இனி நீ எங்கள் நாட்டுக்குள் வந்து பயிர் பச்சைகளை அழிக்கக் கூடாது" என்று பொன்னழகன் சொன்னான்.

"அது எப்படி முடியும்? உன் நாட்டில்தானே நீதி தவறாத ஆட்சி நடக்கிறது? ஆகவே நான் அங்கேதான் தீனி தின்ன வருவேன்" என்றது குதிரை.

இதற்கு என்ன செய்வது என்று இருவரும் ஆலோசித்தார்கள். இறுதியில் பொன்னழகன் ஒரு யோசனை சொன்னான். குதிரைக் குட்டி மேய தனியாக ஒரு வயல் இருக்கும். அந்த வயலில் மட்டும்தான் குதிரை வந்து மேய வேண்டும் என்பதே அந்த யோசனை.

இதற்குக் குதிரையும் ஒப்புக்கொண்டது. "நான் இரவில் வந்து மேய்வேன். குட்டியும் மேயும். ஆகவே, யார் மேய்ந்தது என்ற சந்தேகம் ஏற்படாது" என்றது குதிரை.

"எனக்கு நேரமாகிறது. இந்நேரம் பொழுது விடிந்தாலும்

...ந்திருக்கும். உடனே நான் என நாட்டிற்கு போக வேண்டும்" என்று ...ன்னழகன் சொன்னான். நாட்டுக்குப் போக அவன் 'கிளம்பி ...டான்.

"இப்பொழுது போக முடியாது" என்றது குதிரை. "இப்பொழுது ...ழுது விடிந்துவிட்டது. எல்லாரும் எழுந்துவிட்டார்கள். ...பொழுது போனால், பறக்கும் குதிரையில் நீ வருவதை எல்லாரும் ...த்துவிடுவார்கள். இது உனக்கும் நல்லது அல்ல; என் குட்டிக்கும் ...லது அல்ல. ஆகவே, இன்று இரவு வரை இங்கே இருந்துவிட்டு, ...வு உன் நாட்டுக்கு திரும்பிச் செல்" என்று குதிரை கூறியது.

பொன்னழகனுக்கும் இது நல்ல யோசனையாகவே தோன்றியது. ...ரி, இருக்கிறேன்" என்றான்.

"இன்று பகல் பொழுதை இந்த மரத்தடியிலேயே கழி. இரவு நான் ...ன் குட்டியை அழைத்துக்கொண்டு வருகிறேன். மூவரும் உன் ...ட்டுக்குப் போகலாம்" என்று கூறிவிட்டு, குதிரை போய்விட்டது.

அன்று முழுவதும் அந்த மரத்தடியிலேயே பொன்னழகன் இருந் ...ன். பசி தீர்க்க பழங்களும், தாகம் தீர்க்கத் தண்ணீரும் கிடைத்தன. ...றாக ஓய்வு எடுத்துக்கொண்டான்.

அவன் இவ்வாறு இருக்க, அவனைக் காணாமல அரசர் ...லைப்பட்டார். 'காவலுக்குப் போனவன் திரும்பி வரவில்லையே' ...ன்று வேதனைப்பட்டார். "சிறு பையனை அனுப்பியது தவறு" என்று ...ருத்தப்பட்டார். அன்று முழுவதும் அவருக்கு ஒன்றுமே ஓடவில்லை.

பொன்னழகனைத் தேடிவரும்படி நாலாபுறமும் ஆட்களை அனுப்பினார். காலையில் சென்ற அவர்கள் பகல் முழுவதும் தேடிவிட்டு, ...ாலையில் வெறுங்கையுடன் அரண்மனைக்குத் திரும்பி வந்தார்கள். ...அரசே! நாங்கள் தேடாத இடமில்லை. ஆனால், இளவரசரைக் ...ணோம்" என்று அரசரிடம் கூறினார்கள்.

"போங்கள்! இன்னும் நன்றாகத் தேடிப் பாருங்கள். இளவரசன் இல்லாமல் திரும்பி வராதீர்கள்!" என்று அவர்களை அரசர் மீண்டும் அனுப்பி வைத்தார்.

இரவு வந்தது. மாயக் குதிரையும் வந்தது. குட்டியையும் அழைத்துக்கொண்டு வந்தது. குட்டியைப் பார்த்ததும் பொன்னழகன் கண்களை மூடிக்கொண்டான். அவ்வளவு அசிங்கமாக இருந்தது.

ஒரே கறுப்பு நிறம்! அடுப்புக்கரி கூட அவ்வளவு கறுப்பாக இருக்காது! காகத்தையும் இந்தக் குட்டியையும் பக்கத்தில் பக்கத்தில் வைத்தால், "காகம் வெள்ளையாக இருக்கிறது!" என்று கூறலாம். அவ்வளவு கறுப்பு, இந்தக் குட்டி!

தோற்றமும் அழகாக இல்லை. கரடி போல முடி அடர்த்தியாக இருந்தது. அதுவும் அமைப்பாக இல்லை. ஒட்டகத்திற்குப் போல



அலங்கோலமாக இருந்தது. சுருங்கச் சொன்னால், 'தாய் எவ்வள அழகோ, அவ்வளவு மட்டம் குட்டி!'

மாயக் குதிரை பொன்னழகன் அருகில் வந்தது. "ஏன் கண்கள மூடிக்கொண்டாய்?" என்று கேட்டது.

"இதுதான் உன் குட்டியா? நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்! இ ஏன் இவ்வளவு மோசமாக இருக்கிறது?" என்று பொன்னழக கேட்டான்.

அதைக்கேட்டு 'கலகல' என்று குதிரை சிரித்தது. "தோற்றத்தை பார்த்து யாரையும் குறைவாக மதிப்பிடக் கூடாது என்பதற்காகவே எ குட்டி இவ்வளவு அசிங்கமாக இருக்கிறது. பலாப்பழம் பார்க்க முள் முள்ளாகத்தான் இருக்கிறது. ஆனால், அதற்குள் எவ்வளவு சுவை நிறைந்த சுளைகள் இருக்கின்றன? ஆகவே, யாரையும் தோற்றத்தை கண்டு கேலி செய்யவோ, குறைவாக மதிப்படவே கூடாது. எ குட்டியைத்தான் எடுத்துக்கொள்ளேன்! எவ்வளவு மோசமா

இருக்கிறது. ஆனால் அற்புத சக்திகள்வாய்ந்தது. என்னைப் போலவே மாயக் குதிரை இதுவும். உனக்கு வேண்டிய எந்த உதவியையும் இது செய்யும். இதன் அதிசய சக்திகளைப் பார்த்து நீ ஆச்சரியப்படுவாய்" என்று குதிரை கூறியது.

அதைக்கேட்டு, பொன்னழகன் திருப்தியடைந்தான். குட்டிக் குதிரை மீது ஏறிக்கொண்டான். மாயக் குதிரை பறந்தது. குட்டியும் அதைத் தொடர்ந்து பறந்தது.

சிறிது நேரத்தில் வானமண்டலத்தைத் தாண்டி, வயல்வெளிக்கு வந்து சேர்ந்தார்கள். குதிரையும், குட்டியும் நெல் கதிர்களை மேய்ந்தன.

"எனக்கு நேரமாகிவிட்டது. என்னைக் காணாமல் என் தந்தை இந்நேரம் மிகவும் கவலை அடைந்து இருப்பார். நான் உடனே அரண்மனைக்குப் போக வேண்டும்" என்றான், பொன்னழகன்.

"அது சரிதான். புறப்படுங்கள்" என்றது மாயக் குதிரை.

குட்டி மீது பொன்னழகன் ஏறிக்கொண்டான். அரண்மனையை நோக்கி செலுத்த ஆரம்பித்தான். உடனே, "நில்" என்று மாயக் குதிரை தடுத்தது.

"என் குட்டியையும் அழைத்துக்கொண்டு அரண்மனைக்குச் செல்வது நல்லது அல்ல. அதன் அதிசய சக்திகளை யாராவது அறிந்துகொண்டால், அதனால் உனக்கும் தொல்லை ஏற்படும். என் குட்டிக்கும் தொல்லை ஏற்படும். பொறாமைக்காரர்கள் நிறைந்த உலகம், இது. உன்னைக் கொலை செய்துவிட்டு, என் குட்டியை திருடிக்கொள்கிறவர்கள் கூட இருப்பார்கள். ஆகவே, அதை அரண்மனைக்கு அழைத்துச் செல்லாதே!" என்றது, குதிரை.

"வேறு என்ன செய்வது?" என்று பொன்னழகன் கேட்டான்.

ஊருக்கு வெளியே ஒரு தொழுவம் அமைத்து, அதில் குதிரைக் குட்டியை கட்டிவிட்டுப் போ. உனக்கும் தேவையானபோது வந்து, அதைப் பயன்படுத்திக்கொள்" என்று குதிரை கூறியது.

அதன்படி உடனே ஊருக்கு வெளியில் ஒரு தொழுவம் அமைத்தான் பொன்னழகன். அதில் குட்டிக் குதிரையை கட்டிப் போட்டான். தொழுவத்தைப் பூட்டிவிட்டு, அரண்மனைக்குப் புறப்பட்டான்.

மாயக் குதிரை விண்வெளியில் பறந்து, மறைந்தது.

இதற்கு இடையில், பொன்னழகனைக் காணாமல், அரசர் மிகவும் கவலைப்பட்டார். அரசருக்குச் செல்லப் பிள்ளை, அவன். அவன் பிரிவு, அரசருக்குப் பெருங் கவலையாக இருந்தது. அவனைத் தேடிச் சென்ற ஆட்களிடம் இருந்தும் நல்ல தகவல் இல்லை; ஆகவே, அவர் வருத்தத்துடன் படுக்கையில் படுத்து இருந்தார்.

அப்பொழுதுதான் அரண்மனைக்குள் நுழைந்தான், பொன்னழகன். அவன் வெற்றி வீரனைப் போல வீறுநடை நடந்தான். மகிழ்ச்சி பொங்க, அரசரைப் பார்க்க விரைந்து சென்றான்.

அதற்குள், அவன் வருவதைப் பார்த்த வீரர்கள், அரசரிடம் ஓடிச் சென்று தகவல் தெரிவித்தார்கள். "அரசே! இளவரசர் வந்துகொண்டு இருக்கிறார்" என்று சொன்னார்கள்.

அதைக் கேட்டு அரசர் அளவில்லா ஆனந்தம் அடைந்தார். "என் மகன் வந்துவிட்டானா! எங்கே?" என்று துள்ளிக் குதித்து எழுந்தார்.

"இதோ வந்துவிட்டேன் அப்பா!" என்று கூவிக்கொண்டே, பொன்னழகன் ஓடிவந்தான். அவனை அரசர் கட்டிப்பிடித்துக் கொண்டார். "உனக்கு ஒரு ஆபத்தும் இல்லையே? சுகமாக இருக்கிறாயா?" என்று அரசர் கவலையுடன் கேட்டார்.

"எனக்கு ஒன்றுமில்லை, அப்பா. வெற்றியுடன் வந்திருக்கிறேன்" என்றான், பொன்னழகன்.

"அப்பா! ஒரு மாயக் குதிரை வந்து வயல்களில் மேய்ந்து இருக்கிறது. நான் அதை ஓட ஓட விரட்டினேன்! விரட்டிக்கொண்டே சென்றேன்! அது தலைதெறிக்க ஓடித் தப்பிப் பிழைத்துவிட்டது! இனி நம் நாட்டுப் பக்கம் தலைவைத்துக் கூடப் படுக்காது" என்று மெய்யும் பொய்யும் கலந்து நடந்த விவரங்களைக் கூறினான்.

அதைக்கேட்டு, அரசர் மகிழ்ச்சி அடைந்தார். மகன் ஆபத்து இல்லாமல் திரும்பியதால் அவருக்கு இரட்டை மகிழ்ச்சி. "உன் அண்ணன்களால் கூட முடியாத காரியத்தை நீ சாதித்துவிட்டாய்!" என்று பாராட்டினார்.

அப்பொழுது முத்தழகன், மணியழகன் ஆகிய இருவரும் வந்தார்கள். காவலுக்குப் போன பொன்னழகன் பலியாகிவிட்டான் என்றே இவர்கள் இருவரும் நினைத்து இருந்தார்கள். பொன்னழகனைப் பார்த்ததும் அவர்கள் அதிர்ச்சியடைந்தார்கள். "தம்பி! வந்து விட்டாயா?" என்றார்கள்.

"அவன் வெற்றி வீரனாக வந்திருக்கிறான்! நம் நாட்டு வயல்களில் மேய்ந்து நாசப்படுத்தி வந்த மாயக் குதிரையை ஓட ஓட விரட்டியிருக்கிறான்" என்று அரசர் பெருமையுடன் கூறினார்.

அரசர் தங்கள் முன்னாலேயே தம்பியை பாராட்டியது, முத்தழகன், மணியழகன் இருவருக்குமே பிடிக்கவில்லை. தங்களை மட்டம் தட்டுவதாக நினைத்துக்கொண்டார்கள். ஆகவே, முகத்தை சுளித்துக் கொண்டு சும்மா இருந்தார்கள்.

**(தொடரும்)**

---

*ராணி சிண்டிகேட் சார்பில் அச்சிட்டு, வெளியிட்டவர்: சி. கல்யாணசுந்தரம், ராணி அச்சகம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007.*
*ஆசிரியர்: அ.மா. சாமி, 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007.*

# ஆறுகளைத் தெரிந்துகொள்ளுங்கள்

கடல் நீரில் லட்சக்கணக்கான உயிரினங்கள் வாழ்கின்றன. இதில் மிகப் பெரியது திமிங்கலம். ஆனால் மீன்களில் பெரியது சுறாமீன்.

உயிரினங்களே வாழமுடியாத ஒரு மிகப்பெரிய ஏரி இருக்கிறது. அதன் பெயர் 'சாக்கடல்.' இது இஸ்ரேல் நாட்டுக்கு அருகில் உள்ளது. இந்த ஏரித் தண்ணீரில் உப்பு மற்றும் தாதுக்கள் அதிகமாக இருக்கின்றன. அதனால் இதன் நீர் மிகவும் அடர்த்தியாக உள்ளது.

அதன் காரணமாக, நீச்சல் தெரியாதவர்கள் கூட இந்த ஏரியில் மூழ்காமல் மிதக்கலாம். மல்லாந்து படுத்துக்கொண்டு புத்தகம் கூட படிக்கலாம். ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா!

அதுபோல நல்ல சுத்தமான நீர் உள்ள மிகப்பெரிய ஆழமான ஏரி எங்கே இருக்கிறது தெரியுமா?

அது ரஷ்யா நாட்டில் உள்ளது. அங்குள்ள சைபீரியா என்னும் குளிர்ச்சியான பகுதியில் உள்ளது. இதன் பெயர் 'பைகால்.' இதன் நீளம் 620 கிலோ மீட்டர்.

இந்த ஏரியில் 500 ஆறுகள் வந்து கலக்கின்றன. உலகத்தில் கிடைக்கும் நல்ல நீரில் 22 சதவீதம் பைகால் ஏரியில்தான் உள்ளது. இங்குள்ள மீன்கள் மிகவும் ருசியானவை.

கோடை காலத்தில் இந்த ஏரியில் படகில் செல்வார்கள். குளிர் காலத்தில் மக்கள் கார்களில் பயணம் செய்கின்றனர். அது எப்படி என்று நினைக்கிறீர்களா? நீர் முழுவதும் உறைந்து பனிக்கட்டிப் பாறைகளாக மாறி ரோடு போல் ஆகிவிடுகிறது.

ஆறுகள் நமக்கு நல்ல நீர் கொடுக்கின்றன. நமது சாத்தூரில் தாமிரபரணி ஆற்றுத் தண்ணீர் எவ்வளவு ருசியாக இருக்கிறது.

ஆதிகாலத்தில் மனிதன் காடுகளில் அலைந்து திரிந்தான். வேட்டையாடி வாழ்ந்தான். அவன் ஒரு இடத்தில் நிலையாக வாழ



ஆரம்பித்தது ஆற்றங்கரைகளில்தான்!

எகிப்து நாட்டை 'நைல் நதியின் கொடை' என்று சொல்லுகிறார்கள்.

நைல் நதியைப் போல இன்னொரு பெரிய ஆறு உலகத்தில் உண்டு. அதன் பெயர் அமேசான். அமேசான் ஆறு தென் அமெரிக்காவில் உள்ளது. இதன் கரைகளில் இருண்ட காடுகள் உள்ளன. இங்கு தங்கம் நிறைய கிடைக்கிறது.

அமேசான் ஆற்றில் ஆயிரக்கணக்கில் சிறு ஆறுகள் வந்து சேருகின்றன. இது கடலில் கலக்கும் இடத்திலிருந்து 100 மைல் தூரம் வரை கடல் நீர் உப்புக் கரிக்காது.

சீனாவில் ஒரு ஆற்றின் பெயர் மஞ்சள் ஆறு.

இந்தியாவிலும் பல ஆறுகள் உள்ளன. கங்கை, பிரம்மபுத்திரா, நர்மதா, கோதாவரி, கிருஷ்ணா, காவிரி, வைகை ஆகியவை நம் நாட்டு ஆறுகள். நமது மாவட்டத்தில் அர்ஜுனா ஆறு, குண்டாறு, வைப்பாறு போன்ற ஆறுகள் உள்ளன.

கங்கை, காவிரி இரண்டு ஆறுகளையும் புனித ஆறுகளாக வணங்குகிறார்கள். ★






# நாயைத் தேடி

புதையல் தேடிப் போகிறவர்கள் உண்டு.
ஆனால், ஒரு கூட்டம் ஒரு நாயைத்
தேடிப் போகிறது! ஏன்? எதுக்காக?

**திடுக்கிட வைக்கும் படக்கதை!**

**படிக்கத் தவறாதீர்கள்!**

**ஜூன் 1-ந்தேதி "ராணி காமிக்சி"ல்
இடம்பெறுகிறது!**

*"ராணி காமிக்ஸ்", சென்னை–600 007.*

# கே.வி.ஆர் சிம்பிள் ஆர்ட் கோர்ஸ்

**மிக எளிய ஸ்ட்ரோக்களில் இப்படி படங்களை சுலபமாய் வரையக் கற்றுக் கொள்ளுங்கள்!**



## இனி நீங்கள் ஓவியராவதற்கு செலவு ரூ 250/- மட்டுமே

நீங்கள் வீட்டில் இருந்தபடியே ஓய்வு நேரங்களில் படங்கள் வரைய எளிதில் கற்றுக் கொள்ளலாம். கார்ட்டூன்கள், கேரிகேச்சர்கள், ஸ்டோரி இல்லஸ்ட்ரேஷன்கள். இந்த ஆர்ட் கோர்ஸை முடித்தபின் புள்ளிகள் சிறுசிறு கோடுகளில் ட்ரிக் போட்டோகிரபி போல ட்ரிக் ஆர்ட் கோர்ஸைக் கற்றுவிட்ட ஓவியக் கலைக் கோர்ஸ் இது. ரூ 250/- மட்டும் செலவு செய்து நீங்கள் ஓவியராக தனியாக சம்பாதிக்க இது ஒரு சுலபமான வழியாகும். யாருமே பிறக்கும் போதே ஓவியராகி விடுவதில்லை. பழகிப் பழகியே ஒருவர் தம் திறமையைக் காட்ட முடியும். உங்களைச் சிறந்த ஓவியராக்கி விடும் சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் இதுவே. இதன் வாயிலாக ஒளிமயமான எதிர்காலம் உங்களுக்கு வசமாகப் போகிறது. வாருங்கள். உடனே இந்தக் கோர்ஸில் சேருங்கள். வாழ் நாள் முழுவதும் லாபம் அடையுங்கள்.

**5 கோர்ஸ்**

1. ஆர்ட் ட்ராயிங் கோர்ஸ்
2. ஆர்ட் கார்ட்டூன் கோர்ஸ்
3. ஈஸி அனாடமி கோர்ஸ்
4. ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ்
5. கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ்

**இந்தக் கோர்ஸ்கள் எல்லாம் ரூ 250/-க்கே**

---

**நீங்கள் ஓவியராவது மிக எளிது! இந்தக் கூப்பனை நிரப்பி அனுப்பினால் போதும்!**

## K.V.R. INSTITUTE (Tamil Art Division)

**P.B.No. 1020, 77 Habibullah Road T.Nagar CHENNAI - 600 017**

[illegible]

**முக்கிய செய்தி கம்ப்யூட்டரில் பத்திரப்படுத்திக் கொள்வதற்காக உங்கள் முழு விலாசத்தை ஆங்கிலத்தில் எழுதவும்.**

என் பெயர்: ..........................................................

என் முகவரி: ..........................................................

.......................................................... பின்கோடு ☐☐☐☐☐☐



உங்கள் செலவு ரூ.150

நீங்கள் அடைவது ரூ.199

\+

6 இலவசப் புத்தகங்கள்

\+

முழு இங்கிலீஷ் கோர்ஸ்

இந்த நல்வாய்ப்பு சிலதினங்களுக்கு மட்டுமே





99 ரூபாய்கள் எல்லோருக்கும் பயன்படும் கோர்ஸ்




முழு கே.வி.ஆர். இங்கிலீஸ் கோர்ஸ்

6 இலவசப் புத்தகங்கள்

ரூ.150 செலுத்தி ரூ.349 மற்றும் 6 இலவசப் புத்தகங்கள் நீங்கள் அடைகிறீர்கள்

ஒரு மணிக்கு 25 பைசா செலவு. ஒரு நாளில் 4 மணி நேரம் வீதம் 5 மாதங்கள் மட்டுமே. வீட்டில் இருந்தவாறே உங்களுக்கு கிடைக்கும் நேரத்தில் ஆங்கிலம் பேசவும் எழுதவும் எளிய சூத்திரங்களால் நீங்கள் கற்றுவிடலாம். ஆம். கே.வி.ஆர் இன்ஸ்டியூட் வாயிலாகத்தான். இன்னும் சில நாட்களில் இதே ரூ.150 கோர்ஸை ரூ.250 என ஆக்கப்போகிறோம். இப்போதே சேர்ந்தால் உடனேயே உங்களுக்கு ரூ.100 லாபம். எல்லோருக்கும் பயன்படும் ரூ.99 மதிப்புள்ள இனிமேல் வெற்றிகளெல்லாம் உங்களதே என்ற கோர்ஸை இலவசமாகப் பெறுவது 2 வது லாபம். கோர்ஸுக்கும் பயன்படும் 6 புத்தகங்கள் பெறுவது 3வது லாபம். 25 புத்தகங்கள் (600 பக்கங்கள்) கொண்ட இங்கிலீஷ்கோர்ஸை இப்போது ரூ.150க்கே அடைந்து இந்தலாபங்களை எல்லாம் பெறுங்கள்.

முழு உத்திரவாதம்

100% திருப்திக்கு எங்கள் உத்திரவாதம். கோர்ஸ் பிடிக்காவிட்டால் புத்தகங்களைப் பெற்ற 15 நாட்களுக்குள் அவற்றை சுக்கல் சுக்கலாக கிழித்து அனுப்பினால் எதுவும் கேளாமலேயே தபால் செலவுகளைக் கழித்துக் கொண்டு உங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுக்கிறோம். உடனே கோர்ஸில் சேர்ந்து இந்தலாபங்களை அடையுங்கள். கூப்பனை நிரப்பி அனுப்புங்கள்

உடனே கோர்ஸில் சேர்ந்து இந்த லாபங்களை அடையுங்கள். கூப்பனை நிரப்பி அனுப்புங்கள்

## K.V.R. INSTITUTE (Tamil Division)

P.B.No. 1020, 77 Habibullah Road (Near: Kodambakkam RLY. Station) T.Nagar CHENNAI - 600 017

எனக்கு கோர்ஸின் எல்லா 25 புத்தகங்களும் மற்றும் 6 பரிசுப்புத்தகங்களும் (1. இங்கிலீஷ் டிக்ஷனரி 2. லேர்ட்பவர் 3. லெட்டர் ரைட்டிங் பிராக்டீஸ் 4. அப்ரிவியேஷன்ஸ் டிக்ஷனரி 5. வெர்ப்ஸ டிக்ஷனரி ஆகியவற்றுடன் ரூ.99/- விலைமதிப்புள்ள இனிமேல் வெற்றிகளெல்லாம் உங்களதே என்றகோர்ஸையும் சேர்த்து) உடனே எனக்கு ரூ.150/-க்கு V.P.P. வாயிலாக அனுப்புங்கள். நான் தபால்காரரிடம் பணத்தைச் செலுத்தி அதைப் பெற்றுக்கொள்கிறேன்.

முக்கிய செய்தி ☛ கம்பியூட்டரில் பத்திரப்படுத்திக் கொள்ளவதற்காக உங்கள் முழு விலாசத்தை ஆங்கிலத்தில் எழுதவும்.

என் பெயர்: ..........

என் முகவரி: ..........

..........

RANI COMICS
(TAMIL FORTNIGHTLY)

Licenced to Post WPP
Licence No. TN/MS/(N)134.

Regd. No. TN/MS (N)/461
Regd. as Newspaper in Sri Lanka. ISSN 0971-8567